අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

හින්දු ශිෂ්ටාචාරය I
இந்து நாகரிகம் I
Hindu Civilization I

46 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (×)** இடுவதன் மூலம் காட்டுக.

**1.** சிந்துவெளிப் பிரதேசத்தில் காணப்பட்ட முத்திரைகளில் சிவ வழிபாட்டுடன் இனங்காணப்படுவது
(1) யோகியின் வடிவத்தின் கீழ் மிருகங்களுடன் கூடிய முத்திரை
(2) முக்காலியின்மேல் பாற்கிண்ணம் மற்றும் பாம்பு படமெடுத்தல் ஆகியவற்றுடன் கூடிய முத்திரை
(3) கருவுயிர்க்கும் நிலையிலுள்ள முத்திரை
(4) பூசைத் தட்டுகள் மற்றும் இசைவாத்தியத்துடன் கூடிய முத்திரை
(5) பலியிடல் முத்திரை

**2.** ஆகமம் கூறும் கிரியைகளை வழிப்படுத்தும் நூல்கள்
(1) சங்கிதைகள் (2) பத்ததிகள் (3) தோத்திர மாலைகள்
(4) தந்திரங்கள் (5) பவித்திர விதி

**3.** வேதகாலத் தெய்வங்களில் சூரியனோடு தொடர்புடைய சவிதா என்ற தெய்வத்திற்குரியது
(1) புருஷ சூக்தம் (2) பிரமசரிய சூக்தம் (3) காயத்திரி மந்திரம்
(4) ஆயுஷ்ய சூக்தம் (5) பௌஷ்டிகாணி மந்திரம்

**4.** சாக்த ஆகமங்களுக்குரிய சிறப்புப் பெயர்
(1) தந்திரங்கள் (2) சங்கிதை (3) கிராணம்
(4) பாஞ்சராத்திரம் (5) பக்தி சூத்திரம்

**5.** வட மொழியில் எழுந்த இராமாயணத்தின் ஆசிரியர்
(1) வியாசர் (2) வான்மீகி (3) பாரத்துவாஜர்
(4) கம்பர் (5) இராமானுஜர்

**6.** சிவன் நஞ்சுண்ட அற்புதத்தைக் குறிக்கும் பெயர்
(1) கறைமிடற்றண்ணல் (2) ஆலமர் செல்வன் (3) முக்கட் செல்வர்
(4) திரிபுரதகனர் (5) கங்காதரன்

**7.** ஆழ்வார்களால் போற்றிப் பாடப்பட்ட கோயில்களுக்குரிய பெயர்
(1) கற்றளிக் கோயில்கள் (2) பள்ளிப்படைக் கோயில்கள் (3) ஞாலக் கோயில்கள்
(4) கொகுடிக் கோயில்கள் (5) மங்களாசாசனம் பெற்ற கோயில்கள்

**8.** சைவ நாயன்மார்களுள் சகமார்க்க நெறி நின்று இறைவனை வழிபட்டவர்
(1) அப்பூதியடிகள் (2) சேரமான் பெருமான் நாயனார் (3) சம்பந்தர்
(4) மணிவாசகர் (5) சுந்தரர்

**9.** வீர சைவ தத்துவ முறைமை பின்வருவனவற்றுள் எவ்வாறு அழைக்கப்படும் ?
(1) அந்தர்யாமித்துவம் (2) அநேகாத்மவாதம் (3) சரீரசரீர் சம்பந்தம்
(4) சக்திவிசிஷ்டாத்துவைதம் (5) தர்மபூதஞானம்

[பக். 2 ஐப் பார்க்க

10. இந்து சமய நெறிகள் கூறும் உன்னதமான மனித இலட்சியம்
(1) கிரியை (2) தர்மம் (3) கல்வி (4) தியானம் (5) ஆன்ம விடுதலை

11. ஆறுமுகங்களையுடையவன் என்பதால் முருகனுக்குச் சிறப்பாக அமையும் பெயர்
(1) கடம்பன் (2) கார்த்திகேயன் (3) கந்தன் (4) சண்முகன் (5) குமரன்

12. சைவ சமய மரபில் சரியைத் தொண்டு புரிந்த நாயனார்
(1) நாவுக்கரசர் (2) இளையான்குடிமாற நாயனார் (3) கண்ணப்பர்
(4) அப்பூதியடிகள் (5) திலகவதியார்

13. தமிழக வைணவ பக்தி இயக்கத்தில் பெண்ணாகப் பிறந்து இறைவனைக் காதலனாகக் கண்டு பாடிப் பரவியவர்
(1) மங்கையர்க்கரசியார் (2) திலகவதியார் (3) ஸ்ரீ ஆண்டாள்
(4) காரைக்காலம்மையார் (5) செம்பியன்மாதேவியார்

14. தன்னைக் கோகுலத்து ராதையாகவும் விஷ்ணுவைக் கோகுலத்துக் கண்ணனாகவும் கொண்டு தெய்வீகக் காதலை உணர்த்திய வட இந்திய பக்தி நெறியாளர்
(1) ருக்மணி (2) திரௌபதி (3) சகுந்தலை
(4) மீராபாய் (5) ஜானகி

15. சுவாமி விபுலானந்தரால் எழுதப்பட்ட நூல்களில் ஒன்று
(1) கந்தபுராண நவநீதம் (2) சைவபோதம் (3) சைவதூஷண பரிகாரம்
(4) யாழ்நூல் (5) நற்சிந்தனை

16. சோழர் காலத்தில் நடனப் பெண்களுக்கு வழங்கப்பட்ட விருதுகளில் ஒன்று
(1) நாட்டியரத்தினம் (2) கலாவித்தகர் (3) தலைக்கோலி
(4) நாட்டியக் குரிசில் (5) நடனமாமணி

17. சங்க காலத்தில் இசைப் பண்களைப் பாடியவர்களைக் குறிப்பிடும் பெயர்
(1) கூத்தர் (2) பாணர் (3) கலைஞர் (4) கவி (5) நாதப்பிரம்மம்

18. "என்னை பொய்மையிலிருந்து மெய்மைக்கு இட்டுச் செல்வாயாக" என்ற தத்துவ சிந்தனை இடம்பெறும் உபநிடதம்
(1) கடோபநிடதம் (2) தைத்திரீய உபநிடதம் (3) மாண்டுக்கிய உபநிடதம்
(4) பிருகதாரண்யக உபநிடதம் (5) சுவேதாஸ்வதர உபநிடதம்

19. சங்கர வேதாந்தத்தைச் சிறப்பாகக் குறித்து நிற்கும் பெயர்
(1) விசேட அத்துவைதம் (2) சுத்த அத்துவைதம் (3) கேவலாத்துவைதம்
(4) சிவாத்துவைதம் (5) துவைதாத்துவைதம்

20. பிரம்மம் ஒன்றே; அது பலவாகத் தோற்றம் பெறுவதற்கு சங்கரர் கூறும் காரணம்
(1) அவித்தை (2) மனம் (3) புலனறிவு
(4) ஆணவம் (5) அகங்காரம்

21. ஈஸ்வரனுக்கும் பிரபஞ்சத்திற்கும் இடையே உள்ள பேதத்தைக் குறிக்க மத்துவர் கையாளும் பெயர்
(1) சீவபரஸ்பர பேதம் (2) சடபரஸ்பர பேதம் (3) சீவஈஸ்வர பேதம்
(4) சடஈஸ்வரபேதம் (5) சீவசடபேதம்

22. "மகா விஷ்ணு மூர்த்தியே சர்வ வல்லமை படைத்த ஈஸ்வரன்" என்ற கோட்பாட்டைக் கொண்டது
(1) அத்துவைதம் (2) துவைதம் (3) காபாலிகம்
(4) பிரதியபிஞ்ஞான தர்சனம் (5) பாசுபதம்

23. சிவஞானபோதத்தின் பகுப்பு முறையை ஒழுங்கில் கொண்டுள்ள தொகுதி
(1) தந்திரவியல், விக்கிரகவியல், சாதனவியல், பசுவியல்
(2) பதி இயல், முத்தி இயல், பிரமாணவியல், அருளியல்
(3) உயிரவைநிலை, அருளதுநிலை, பதிமுதுநிலை, இருண்மலநிலை
(4) பிராமணவியல், இலக்கணவியல், சாதனவியல், பயனியல்
(5) பசுவியல், முத்தி இயல், பயனியல், அருளியல்

24. விஜயநகர நாயக்கர் காலத்தில் வேதாந்த சித்தாந்த சமரசத்தை வலியுறுத்தியவர்
(1) அருணகிரிநாதர் (2) சிவப்பிரகாசர் (3) தாயுமானவர்
(4) வித்தியாரண்யர் (5) கச்சியப்பர்

25. சைவ சித்தாந்த சாத்திரங்களில் எட்டு நூல்களை இயற்றிய சிறப்பிற்கு உரியவர்
(1) மெய்கண்டார் (2) உமாபதி சிவாசாரியார் (3) அருணந்தி சிவாசாரியார்
(4) மனவாசகங்கடந்த தேவர் (5) உய்யவந்த தேவர்

[பக். 3 ஐப் பார்க்க

- **46** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுகளை வாசித்து, அவற்றுக்குப் பொருத்தமானவற்றை **I, II, III, IV** ஆகிய நிரல்களிலிருந்து தெரிவுசெய்க.

| I | II | III | IV |
|---|---|---|---|
| A<br>ஒழுக்கநெறி | F<br>உண்மை பேசுதல் | K<br>சாரித்திரம் | P<br>பஞ்சகாலத்தில் கஞ்சித் தொட்டி தர்மம் |
| B<br>இசைத்தன்மை கொண்டவை | G<br>இந்தியாவின் புதுயுகத் தந்தை | L<br>பகுத்தறிவுவாதத்தின் முன்னோடி | Q<br>ஆன்மீகக்கல்வி |
| C<br>சைவப் பிரசங்கம் ஆற்றியமை | H<br>வியவகாரம் | M<br>ஆலய புனருத்தாரணம் | R<br>ராஜசாசனம் |
| D<br>தர்மம் | I<br>இறைவனை மகிழ்விப்பவை | N<br>குருபக்தி | S<br>வேதாந்தக் கொள்கைக்கு முக்கியத்துவம் கொடுத்தமை |
| E<br>பிரம்மசூத்திரத்திற்கு உரை எழுதியவர் | J<br>புராண படனம் | O<br>ஆலயங்களில் இறைவனின் இருப்பை நிருபிப்பவை | T<br>இறைநாட்டத்தை ஏற்படுத்த வல்லவை |

**46.** நாயன்மார்களது பாடல்களின் தெய்வீகச் சிறப்பைக் குறிப்பிடும் தொகுதி
(1) AFLT (2) AILR (3) BGLS (4) BIOT (5) EFLP

**47.** இந்து சமூகத்தை மறுமலர்ச்சியடையச் செய்த ராஜாராம் மோகன்ராயோடு தொடர்புடைய தொகுதி
(1) AILT (2) BFOP (3) BGOR (4) CILR (5) EGLS

**48.** இந்து அரசியலில் அரச நீதிக்குப் பிரதானமானவை எனக் குறிப்பிடப்படும் விடயங்கள் அடங்கிய தொகுதி
(1) AGLT (2) DHKR (3) DHLT (4) DILR (5) DIOT

**49.** ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவ சமய வளர்ச்சிக்கென மேற்கொண்ட பணிகளுடன் தொடர்புடைய தொகுதி
(1) BGLR (2) CHLR (3) CINR (4) CJMP (5) EGOR

**50.** இந்துக் குருகுலக் கல்வியின் உன்னத இலட்சியங்களைக் குறிக்கும் தொகுதி
(1) AFNQ (2) CILT (3) DILR (4) EHNT (5) EJLT

***

26. 'தேவாரம் வேதசாரம்' என்ற நூலை இயற்றிய ஈழத்துச் சைவசித்தாந்த அறிஞர்
(1) ஆறுமுகநாவலர் (2) அருணாசல தேசிகர் (3) காசிவாசி செந்திநாதையர்
(4) ஞானப்பிரகாசர் (5) சிவபாதசுந்தரனார்

27. "நூல்முறை தெரிந்து சீலத்து ஒழுகு" எனக் கூறியவர்
(1) அருணகிரிநாதர் (2) ஔவையார் (3) கபிலர்
(4) இராமானுஜர் (5) குமரகுருபரர்

28. "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" என்ற, மக்களுக்குரிய அறவியற் கருத்துகளைக் கூறும் நூல்
(1) ஆத்திசூடி (2) நல்வழி (3) கொன்றை வேந்தன்
(4) மூதுரை (5) பரிபாடல்

29. "சத்தியமே வெற்றி பெறும்" என்ற வாசகம் இடம்பெறும் உபநிடதம்
(1) கடோபநிடதம் (2) கேன உபநிடதம் (3) முண்டக உபநிடதம்
(4) சாந்தோக்கிய உபநிடதம் (5) பிரச்ன உபநிடதம்

30. பஞ்சசீலக் கொள்கை எனப்படும் ஐந்தொழுக்க அறங்கள் பற்றிக் கூறும் சமயம்
(1) ஜைனம் (2) சைவம் (3) பௌத்தம் (4) சாக்தம் (5) வைணவம்

31. நாட்டார் வழக்காறுகளில் மிகப் பொருத்தமான செயற்பாடாக இனங்காணப்படுவது
(1) பொழுதுபோக்கு (2) நகைச்சுவை (3) தலைமைத்துவப் பண்பு
(4) சமூக நன்மை (5) மடைபரவி வழிபடுதல்

32. மனுஸ்மிருதி என்ற நூலுக்கு விளக்கவுரை செய்த அறிஞர்
(1) சுவாமி விவேகானந்தர் (2) மேதாதி (3) ராஜாராம் மோகன்ராய்
(4) சுவாமி விபுலானந்தர் (5) கலாயோகி ஆனந்தகுமாரசுவாமி

33. "அரசன் சட்ட ஒழுங்கை நிலைநாட்டாவிடின் பெரிய மீன் சிறிய மீனை விழுங்குவது போல் வலியோர் மெலியோரைத் துன்புறுத்துவர்" எனக் குறிப்பிடும் கோட்பாடு
(1) இருவினையொப்பு (2) கர்மயோகம் (3) மத்ஸ்ய நியாயம்
(4) வேத நீதி (5) ஆட்சியுரிமை

34. சுவதர்மம் என்ற பதம் எதனைக் குறித்து நிற்கிறது ?
(1) பிறருக்குச் செய்யும் கடமை (2) ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய கடமை
(3) பசுவுக்குச் செய்யும் நன்மைகள் (4) பெண்களைப் பேணிக்காத்தல்
(5) சுற்றுச் சூழலைப் பாதுகாத்தல்

35. குறிப்பிட்டதொரு மாதப்பிறப்பிற்குரிய இந்துக்களின் உணவு
(1) பத்தியம் (2) கஞ்சி (3) ஆடிக்கூழ்
(4) காயம் உண்ணல் (5) அன்னப்பிராசனம்

● **36** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

36. **அனுராதபுர கால இந்து சமய வளர்ச்சி**
(1) இலங்கை வரலாற்றில் கி.மு. 3ஆம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதி அனுராதபுர காலமெனக் கொள்ளப்படுகின்றது.
(2) பௌத்த சமய நம்பிக்கைகளும் இந்து சமய மரபுகளும் வளர்ச்சியடைந்த காலம் என்ற வகையில் இக்காலப் பகுதிக்கு தனித்துவம் உண்டு.
(3) தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல் நிலை, சமய மறுமலர்ச்சி என்பன இங்கு அதிக செல்வாக்குச் செலுத்தவில்லை.
(4) இக்காலப்பகுதியில் இந்துத் தெய்வங்கள் தொடர்பான ஆதாரங்கள் கிடைக்கப்பெறுகின்றன.
(5) இலங்கை வரலாற்றில் இக்காலத்தில் பௌத்த சமயம் அரச ஆதரவுடன் வளர்ச்சி பெறத் தொடங்கியது.

37. **இந்துக் கலைக்கோட்பாடு**
(1) இந்துப் பண்பாட்டின் ஓர் அம்சமாகவே கலைகள் அமைகின்றன.
(2) கட்டட, சிற்ப, ஓவியங்கள் கட்புலக் கலைகளாகும்.
(3) இசை, நடனம் போன்றவை அவைக்காற்றுக் கலைகளாகும்.
(4) இந்து சமய மரபில் கலை அனுபவமும் ஆத்மீக அனுபவமும் வெவ்வேறு அனுபவ வெளிப்பாடுகளாகும்.
(5) கலை என்பது இயல்பாகவே ஒழுங்கு விதிமுறைகளைக் கொண்டுள்ளமை அதன் சிறப்பம்சமாகும்.

[பக். 4 ஐப் பார்க்க

8557

**38. மெய்கண்ட சாத்திரங்களில் ஒன்றான சிவஞானசித்தியார்**
(1) சிவஞானசித்தியார், சிவஞானபோதத்தின் வழிநூலாகும்.
(2) இது அருணந்தி சிவாசாரியாரால் இயற்றப்பட்டது.
(3) இந்நூலில் பரபக்கம், சுபக்கம் எனும் இரு பிரிவுகள் உள்ளன.
(4) மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கினுள் மிகச் சுருக்கமான நூல் இதுவாகும்.
(5) சிவத்தின் மேல் தெய்வமில்லை; சிவஞானசித்திக்கு மேல் ஒரு சாத்திரமில்லை என இந்நூலின் சிறப்பைப் போற்றுவர்.

**39. திருநெல்வேலி ஞானப்பிரகாச முனிவர்**
(1) ஈழத்தில் தோன்றிய சைவப் பெரியார்களுள் ஞானப்பிரகாச முனிவரும் ஒருவராவார்.
(2) வேதாரண்யத்தில் தங்கியிருந்து திருத்தொண்டுகள் பல செய்தார்.
(3) தமிழிலும் வட மொழியிலும் சைவ சித்தாந்தம் பற்றிய பல நூல்களை எழுதினார்.
(4) இவர் இயற்றிய சிவயோகரத்தினம் என்ற நூல் தமிழ்ப் பாடல்களைக் கொண்டது.
(5) போர்த்துக்கேயர் விதித்த சட்டத்திற்கு உடன்படாதவராய் பசுவதைக்கு அஞ்சி யாழ்ப்பாணத்தை விட்டு தமிழகம் சென்றார்.

**40. இந்து அறிவியல்**
(1) அறிவைக் கொண்டு ஏதேனுமொன்றை ஆராய்ந்து உண்மைத்தன்மைகளை நிறுவுதலே அறிவியல் என வரைவிலக்கணப்படுத்துவர்.
(2) இந்து அறிவியற் துறைகள் ஒவ்வொன்றும் இந்துக்களின் வாழ்வியலோடு தொடர்புபட்டவையாக விளங்குகின்றன.
(3) இந்து அறிவியற் துறைகளுள் இந்துக் கணிதவியல் முக்கியத்துவம் பெறுகின்றது.
(4) குப்தர் காலத்தில் தோன்றிய ஆரியபட்டீயம், பஞ்சசித்தாந்திகா போன்ற நூல்களில் கணிதவியற் கருத்துகள் உள்ளன.
(5) தமிழ் நூல்களின் வரிசையில் திருமுறைகளில் கணிதவியல் பற்றிய குறிப்புகள் மிக அரிதாகவே உள்ளன.

- மேல்வரும் பகுதிகளிலே தரப்பட்டுள்ள சொற்களில் **இவ்விரண்டு** சொற்கள் குறிப்பிட்ட ஒரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **41** தொடக்கம் **45** வரையுள்ள வினாக்களுக்குப் பொருத்தமான சோடியைத் தெரிவுசெய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>ஐந்தாம் வேதம் | B<br>கீர்த்தனைகள் | C<br>சமுதாய ஒழுங்கு | D<br>இகழ்தல் ஆகாது | E<br>சகுண பிரமம் |
| F<br>எறிதல் ஆகாது | G<br>நிர்க்குண பிரமம் | H<br>இந்துக் கலைக் களஞ்சியம் | I<br>அறத்தை நிலைநாட்டுதல் | J<br>இசைத் தூண்கள் |

**41.** மகாபாரதம் தொடர்பான சிறப்பம்சங்களைக் குறிப்பிடும் சோடி
(1) AG (2) AH (3) CF (4) DJ (5) EI

**42.** நாயக்கர் காலத்தில் அறிமுகமான இசைத்துறை சார்ந்த கலையம்சங்களைக் குறிக்கும் சோடி
(1) AI (2) BH (3) BJ (4) CJ (5) DG

**43.** சங்கரர் குறிப்பிடும் பிரமத்தின் இரு நிலைகளைக் குறிக்கும் சோடி
(1) AF (2) BI (3) BJ (4) DJ (5) EG

**44.** தர்ம சாத்திரங்களின்படி தண்டநீதி மூலம் பாதுகாக்கப்படும் இரு துறைகளைக் குறிக்கும் சோடி
(1) AH (2) AJ (3) BH (4) CI (5) EH

**45.** தைத்திரீய உபநிடதத்தில் உயிரைக் காப்பாற்றும் அன்னம் தொடர்பான கருத்துகளைக் குறிக்கும் சோடி
(1) AG (2) BH (3) DF (4) DJ (5) EI

[பக். 5 ஐப் பார்க்க

08557

AL/2016/46/T-II





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

හින්දු ශිෂ්ටාචාරය II
இந்து நாகரிகம் II
Hindu Civilization II

46 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** "வேதங்கள் இந்துப் பண்பாட்டை வளம்படுத்தியுள்ளன." இக்கூற்றை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.
- (அ) வேதங்களின் அமைப்பு
- (ஆ) வேதங்கள் சுட்டும் பிரதான தேவர்கள் பற்றிய விளக்கம்
- (இ) சமய வழிபாடு
- (ஈ) இந்து சமயத்தில் வேதங்களின் முக்கியத்துவம்

**2.** தமிழகத்தில் பல்லவர் காலத்தில் சைவ சமயம் வளம்பெற்றவாற்றை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலிக்குக.
- (அ) அரசியல் சமூக சூழ்நிலை
- (ஆ) நாயன்மார்களின் பணி
- (இ) திருக்கோயில்களின் வளர்ச்சி

**3.** "மனிதகுல மேம்பாட்டிற்காக உழைப்பதில் இராமகிருஷ்ண மிஷனின் பணி மகத்துவமானது." மேல்வரும் தலைப்புகளின் அடிப்படையில் இக்கூற்றை ஆராய்க.
- (அ) இராமகிருஷ்ணரின் போதனைகள்
- (ஆ) சுவாமி விவேகானந்தரும் இராமகிருஷ்ண மிஷனும்
- (இ) சமய சமூகப் பணிகள்

## பகுதி II

**4.** ஆலயங்கள், இந்துப் பண்பாட்டு வளர்ச்சியில் முக்கியத்துவம் பெறுமாற்றை ஆராய்க.

**5.** இந்து நுண்கலைகளுள் விக்கிரகக்கலை பெறும் முக்கியத்துவத்தினை எடுத்துக்கூறி, அதன் சிறப்பம்சங்களை சிவ வடிவமொன்றுடன் தொடர்புபடுத்தி விவரிக்குக.

**6.** இராமானுஜ வேதாந்தத்தின் சிறப்பினை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலிக்குக.
- (அ) இராமானுஜரின் தத்துவக் கோட்பாட்டு உருவாக்கத்திற்கு உதவிய நூல்கள்
- (ஆ) பரம்பொருட் கொள்கை
- (இ) ஆன்மாவுக்கும் பரம்பொருளுக்கும் இடையில் உள்ள தொடர்பு

**7.** சைவ சித்தாந்தத்தில் உலகப் படைப்புப் பற்றி விளக்கப்படுமாற்றை ஆராய்க.

**8.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **நான்கிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.
- (அ) இந்து சமயத்தில் புராணங்கள்
- (ஆ) திருக்கேதீஸ்வரம்
- (இ) பகவத்கீதை
- (ஈ) அருணகிரிநாதர்
- (உ) ஆச்சிரம தர்மம்
- (ஊ) இந்து சமூகத்தில் சோதிடம்

※ ※ ※